13th February 1958]

SRI V. K. KOTHANDARAMAN : கடந்த 6 மாத காலத்திலே நியமிக்கப்பட்ட அதிகாரிகள் விஷயத்திலாவது எந்த மாறுதலாவது கொண்டுவந்திருக்கிறாரா ?

MR. SPEAKER : கனம் மந்திரி அவர்கள் புரியவில்லை என்று சொல்லுகிறார்.

SRI V. K. KOTHANDARAMAN : ஆறுமாத காலத்தில் நியமிக்கப்பட்ட அதிகாரியை நீக்கிவிட்டு வேறு சில அதிகாரியை சர்க்கார் நியமிக்க உத்தேசித்திருக்கிறார்களா ? அப்படி இருந்தால் அதன் காரணம் என்ன ?

THE HON. SRI C. SUBRAMANIAM : சனம் அங்கத்தினர் எதையோ வைத்துக்கொண்டு எதையோ ஒன்றை சொல்கிறார்.

SRI M. P. SUBRAMANIAM : மராமத்து இலாகா தலைமை அதிகாரிக்கு மீண்டும் அந்த இலாக்காவில் பதவிகால நீடிப்பு அளிக்கப்பட்டிருக்கிறதா ? இந்த இரண்டு இலாக்காகளிலும் தகுதி பெற்றவர்கள் இல்லையா ? அவர்களுக்கு எந்த அடிப்படையின் மீது சம்பளம் கொடுத்து வருகிறார்கள் ?

THE HON. SRI C. SUBRAMANIAM : மராமத்து இலாக்காவில் ஜெ. எப். பிரட்ரிக்கும், ஸ்ரீ ஆனந்த ராவுக்கும் மீண்டும் உத்தியோகம் கொடுக்கப்பட்டிருக்கிறது. இப்போது சர்க்காருக்கு அவசியம் தேவைப்படுகிறது. ஆகவேதான் அனுமதித்திருக்கிறார்கள்.

SRI K. VINAYAKAM : Sir, apart from the merits of the question, does not this kind of re-employment or extension of service shut out the prospects of the juniors in the same department who are equally qualified or equally competent to carry on the work? Unless opportunities are afforded to them, how will they be able to serve our State.

THE HON. SRI C. SUBRAMANIAM : That is taken into consideration when we re-employ a particular person. If there are persons available with suitable qualifications, not only with suitable qualifications but with sufficient experience, they are given a chance and then re-employment is given.

*New posts carrying a salary above Rs. 1,500*

* 88 *Q.*—SRI K. SATTANATHA KARAYALAR : Will the Hon. the Chief Minister be pleased to state—

(*a*) the number of new posts carrying a salary of more than Rs. 1,500 created during the past six years; and

(*b*) the reasons for their creation?

THE HON. SRI C. SUBRAMANIAM : (*a*) & (*b*) A statement is placed on the table of the House [a].

SRI K. SATTANATHA KARAYALAR : தற்சமயம் இதுபோன்ற 1,500 ரூ. சம்பளம் வாங்கக்கூடிய பதவிகளை சிருஷ்டித்திருக்கிறார்களா ? அப்படி இருந்தால் எந்த நோக்கத்தோடு.

THE HON. SRI C. SUBRAMANIAM : தற்சமயம் அந்த நோக்கம் சர்க்காருக்கு இல்லை. அவசியம் ஏற்பட்டால் அதை சிருஷ்டித்துத்தான் ஆகும்.

---

a Printed as Appendix II at page 379 infra.